அபூபக்கர் ரளி உமர் ரளி விமர்சிப்பவர் அல்லாஹ்வின் நேசத்திற்குரியவர்களை ஹாளிர் நாளிர் என்பதை மறுப்பவர் இருவரும் கொள்கையின் பேரில் இதனை அவசியமாக்கி கொள்வது இறைநிராகரித்தல் இவனின் நிக்காஹ் செல்லாது.எவரின் செயலானது கொள்கையுடன் தொடர்புடையதாக இருந்து அஹ்லுஸ்ஸுன்னாவிற்கு மாற்றமாக இருந்தால் திட்டவட்டமாக மதம் மாறியவர் அவரை கொள்வது வாஜிப் (அன்வாரே கமரிய்யா 107)

பரேல்வி முஹம்மது உமர் கூறுகிறார் நபி ஸல் அவர்களை ஹாளிர் நாளிர் என்பதை மறுப்பவர் இதனால் அவர் ஈமானை விட்டு நீங்கிவிடுவார்.(மிக்யாஸ் ஹனஃபிய்யத்)

பைஜ் அஹ்மத் உவைஸி எழுதியுள்ளார் தன்னை முஃமீனாக ஏற்காதவர் நபி ஸல் அவர்களை நபியாக ஏற்காதவர் தான் நபி ஸல் அவர்களின் ஹாளிர் நாளிர் என்பதை மறுப்பவர் ( ஸஹாபஹ் கிராம் அகீதா பக்கம்:8)

மௌலவி குலாம் நஸீருத்தீன் ஸய்யாலவி கூறுகிறார்கள் இந்த மக்கள் நபி ஸல் அவர்களின் பரீபூரணமான குணங்களை மறுப்பதால் காபிராகிவிட்டார்கள்.பரிபூரணமான குணங்கள் என்பது மறைவான ஞானம் ஹாளிர் நாளிர் மிஃராஜ் இரவில் பெருமானார் அவர்கள் அல்லாஹ்வை தரிசித்தல் நபி ஸல் அவர்கள் உதவி செய்வதை அண்ணலாரிடமிருந்து உதவி தேடுவதை மறுப்பவர் இவைகள் அவர்களின் இறைமறுப்பின் காரணிகளாகும்.(இபாராத் அகாபிர் கா தஹ்கீஹி வ தன்கீதி ஜாயிஜா 1/69, தேவ்பந்தி மத்ஹப் 635)

பரேல்விய அறிஞரிடத்தில் ஹாளிர் நாளிர் குறித்து விளக்கம் கேட்கவேண்டும்.சில சமயத்தில் ஒன்றும் மற்றொரு சமயத்தில் வேறொன்றும் கூறுகிறார்கள்.

ஹாளிர் என்பது முன்னால் இருப்பது நாளிர் என்பது நபி ஸல் அவர்கள் தனது இடத்தில் இருந்தவாறு அமல்களின் ஏடுகளை சுருக்கமாக பார்ப்பது இந்த கருத்தில் கூறினால் தவறில்லை. எனினும்

பரேல்விகளிடத்தில் நமது வினா? ஹாளிர் நாளிரின் கருத்து என்ன நபி ஸல் அவர்கள் ஹாளிர் நாளிர் என்பதாக கூறுகிறீர்களே அதனின் விளக்கம் என்ன?

பெருமானார் ஸல் அவர்கள் எல்லா இடத்திலும் ஹாளிர் நாளிர் என்பது ஆன்மாவுடன் மட்டுமா? அல்லது ஆன்மா மற்றும் உடலுடன் சேர்ந்தா?

பரலேவிகளின் பதில்:

உடல் மற்றும் ஆன்மா இரண்டின் பேரில்தான் என்று வாதிட்டால்

நமது கேள்வி: உடலானது பார்வையில் தென்படும்.உலகத்தில் இருக்கும்.அபூலஹப் மற்றும் அபூஜஹ்லுக்கு அண்ணலாரின் புனித உடல் கண்களில் தென்பட்ட பொழுது உங்களின் கண்களுக்கு ஏன் தெரிவதில்லை? ஒன்று உங்களின் கொள்கை தவறாக இருக்க வேண்டும் அல்லது அபூஜஹ்ல் மற்றும் அபூலஹப் விட கேடுகெட்டவர்களாக இருக்க வேண்டும்.

பரேல்விகளின் பதில்: அண்ணலாரின் பரிசுத்தமான ஆன்மா மட்டும் எல்லா இடங்களிலும் ஹாளிர் ஆஜராக கூடியது நாளிர் பார்க்க கூடியது என்று வாதிட்டால்

நமது பதில்:அண்ணலார் வாழும் பொழுது அன்னாரின் ஆன்மா அண்ணலாருடன் இருப்பில் இருந்திருக்கும்.உலகத்தில் எல்லா இடங்களிலும் இப்பொழுது இருக்கிறதென்றால் எப்பொழுது இருந்து ஆன்மா ஹாளிர் நாளிர் ஆரம்பமானது?

பரேல்விகளின் பதில்: நபி ( ஸல்) அவர்களின் மறைவிற்கு பிறகு என்று வாதிட்டால்

நமது வினா? இதனை பரேல்விகளுக்கு யார் கூறினார் ஏனெனில் மார்க்கம் முழுமை பெற்றுவிட்டது.எனவே பரேல்விகள் அவர்களின் கொள்கையை நிரூபிக்க முடியாது.

எனவே அண்ணலார் பெருமானார் ( ஸல்) அவர்கள் பரக்கத்துமிக்க உடல் மற்றும் ஆன்மாவுடன் ஹாளிர் நாளிர் என்ற கொள்கையும் ஆன்மாவுடன் மட்டும்

ஹாளிர் நாளிர் என்ற கொள்கையும் அடிப்படையற்றது.ஆதாரமற்றது.

அறிவூப்பூர்வமான ஆதாரப்பூர்வமான வாதங்கள்

உலகத்தில் அனைத்துப் பொருட்களுக்கும் எல்லை உண்டு.அல்லாஹ்வை தவிர ஒரு பொருளானது ஒரு இடத்தில் இருந்தால் மற்றொரு இடத்தில் இருக்காது.ஒரு பொருள் ஓர் இடத்தில் இருந்தால் அது அந்த இடத்தை பிடித்துக்கொள்ளும். உதாரணமாக வெளிச்சத்தை பாருங்கள் வெளிச்சம் இருந்தால் இருள் இருக்காது.இருள் இருந்தால் வெளிச்சம் இருக்காது.எதிரெதிரான இரண்டும் ஒரே நேரத்தில் ஓர் இடத்தில் இருக்காது.பகலின் வெளிச்சத்தில் அமரும் பொழுது அந்த இடத்தை நமது உடல் பிடித்துக்கொள்ளும்.நாம் எழுந்த பிறகுதான் வெளிச்சமான அந்த இடத்தை அடையும்.எல்லா படைப்புகளையும் அல்லாஹ் حادث க படைத்துள்ளான்.حادث என்பது ஆரம்பத்தில் இல்லை.பின்னால் இருப்பில் வந்தது.எல்லா இடங்களில் ஒவ்வொரு நொடியும் ஒவ்வொரு மணித்துளியும் இருப்பில் இருக்கும் எந்தப் படைப்பையும் அல்லாஹ் படைக்கவில்லை. அடுத்து

ஆன்மாக்களை எடுத்துக் கொள்வோம் அவைகளிலும் ஒன்று மற்றொன்றில் நுழையாது. உதாரணமாக வானவர் மனித உருவத்தில் பூமிக்கு வருகிறார் என்றால் அவரின் வானத்தில் இருக்கும் அசலான தோற்றமானது அங்கு இருக்காது.இவ்வாறே அசலான தோற்றத்துடன் வானத்தில் இருந்தால் உலகத்தில் இருக்க மாட்டார்.

பரேல்விகளின் வாதம் அண்ணலார் ஸல் அவர்கள் ஹாளிர் நாளிர் என்பது நபி ஸல் அவர்கள் இருப்பதுடன் எல்லா இடங்களையும் பார்க்கிறார்கள்.பார்வையிடுகிறார்கள்.அண்ணலாரின் கண்களை விட்டும் மறைந்ததில்லை என்று வாதிட்டால்

இதிலும் வினா எழும் இந்த பார்வையிடுதல் எப்பொழுது இருந்து ஆரம்பமானது உலகம் தோன்றிய நாளிலிருந்தா அல்லது அண்ணலார் படைக்கப்பட்ட நாளிலிருந்தா பரேல்விகள் பதில் அண்ணலார் படைக்கப்பட்ட நாளில் என்று வாதிட்டால் நமது பதில் ஹள்ரத் மர்யம் அலை அவர்களை வளர்க்கும் பொறுப்பை குறித்து பேசும் குர்ஆன் அண்ணலார் இல்லை என்பதாக கூறுகிறது இது மட்டுமின்றி குர்ஆனில் பல்வேறு இடங்களில்

வருகிறது மூஸா அலை அவர்களின் சம்பவத்தை குறித்து பேசும் போது அண்ணலார் இல்லை என்கிறது.எனவே பரேல்விகளின் வாதம் தவறாகும். நபி ஸல் அவர்கள் வாழும் போது ஹாளிர் நாளிர் என்றால் எந்த நாளிலிருந்து என வினா எழும்பும்.இது குறித்து தெரியாது என்று கூறினால் நமது பதில் சரி இதனை குறித்து பிறகு பார்க்கலாம். ஸஹாபாக்கள் நபி ஸல் அவர்கள் வாழும் போது ஹாளிர் நாளிர் என்பதாக கொள்கையை ஏற்கவில்லை.ஸய்யிதா ஹப்ஸா ரளி அவர்களுக்கு நபி ஸல் அவர்கள் ரகசியத்தை கூறினார்.அதனை மறைத்து ஆயிஷா ரளி அவர்களுக்கு கூறிவிட்டார்கள்.அவர்களின் கொள்கையானது ஹாளிர் நாளிர் என்பதாக இருந்தால் ரகசியத்தை வெளிப்பிடுத்தி இருக்கமாட்டார்கள்.ரகசியத்தை பிறகு ஏன் வெளிப்படுத்த வேண்டும்.ஹள்ரத் கஃப் இப்னு மாலிக் ரளி அவர்கள் கூறுகிறார்கள் ( போரில் கலந்துகொள்ளாமல்) தலைமறைவாகிவிடலாமென நினைக்கும் எந்த மனிதரும், அல்லாஹ்விடமிருந்து இறை அறிவிப்பு ( வஹீ) வராத வரையில் ( தான் போருக்கு வராத) விஷயம் நபி(ஸல்) அவர்களுக்குத் தெரிய வராது என்று எண்ணவே செய்வார். ( அந்த அளவிற்குப் படையினரின் எண்ணிக்கை மிகுந்திருந்தது.(ஸஹீஹுல் புகாரி)

ஆஸிம் (ரளி) எதிரிகளிடம் சிக்கி கொண்ட பொழுது اللهم اخبر عنا نبيك

யா அல்லாஹ்! எங்களின் செய்தியை உனது நபிக்கு அறிவித்துவிடுவாயாக!

ஸஹாபாக்கள் அண்ணலாரை குறித்து غائب மறைவாக இருக்கிறார் என்று கூறியுள்ளனர்.

நபி ஸல் அவர்கள் கூறினார்கள் الشاهد يرى مالا يرى الغائب

ஷாஹித் என்பவர் பார்ப்பவர்

காயிப் என்பவர் பார்க்காதவர் (ருஸ்துல் ஈமான் 86)

நபி (ஸல்) அவர்கள் அலி (ரளி) அவர்களை ஓர் அடிமையை கொல்லும்படி அனுப்பினார்கள்.அவர்கள் கொல்லவில்லை.திரும்பி வந்து கூறினார்கள் அடிமையானவர் ஆண்மையில்லாதவர்.

திர்மிதியில் வரும் அறிவிப்பு

ان ام سعد ماتت و النبي صلى الله عليه و سلم غائب ஸஃது ரளி அவர்களின் தாயார் மரணமான போது நபி ஸல் அவர்கள்

மறைந்தவராக இருந்தார்கள்.(முர்ஸல் ஸயீத் இப்னு முஸய்யிப்)

இமாம் ஜஸ்ஸாஸ் எழுதியுள்ளார்கள் فاما الحالتان كان يجوز فيهما الاجتهاد فى حياة النبي صلى الله عليه وسلم فى حال غيبتهم عن حضرته அதாவது இருநிலைகள் அதிலே நபி ஸல் அவர்கள் வாழும் போது அண்ணலாரை விட்டு அவர்கள் மறைந்து இருக்கும் நிலையில் ஆய்வு செய்தல் கூடும் (அஹ்காமுல் குர்ஆன்)

இமாம் ஜயீலயி ஹனஃபீ ரஹ் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள் قد مات من الصحابة خلق كثير و هم غائبون عنهم ஸஹாபாக்களில் அதிகமானவர்கள் மரணித்த போது அண்ணலாரை விட்டும் மறைந்தவர்களாக இருந்தார்கள்.(நஸபுர் ராயா)

ஆக நபி ஸல் வாழும் போது ஹாளிர் நாளிர் என்பதும் தவறாகும்.மரணத்திற்கு பிறகு ஹாளிர் நாளிர் என்றால் அதனை கூறியவர் யார்? ஏனெனில் மார்க்கம் நிறைவு பெற்றுவிட்டது.